# ஸ்ரீ குரு தெட்சிணாமூர்த்தி

[ காஞ்சி மாமுனிவர் விளக்கமும் - ஸ்தலப் பெருமைகளும் - ஸ்தோத்திரங்களும் ]





சிங்காரச் செல்வர்
நாகை சி. அருண்குமார்

# ஸ்ரீ குரு தெட்சிணாமூர்த்தி

(காஞ்சி மாமுனிவர் விளக்கமும், ஸ்தலப் பெருமைகளும், ஸ்தோத்திரங்களும்...)

அன்பளிப்பு : 73-2

தஞ்சாவூர்

நடராஜ பிள்ளை உலகநாதன் M.A.B.T

நஉலகநாதன



சிங்காரச் செல்வர்

நாகை. சி. அருண்குமார்

அன்பளிப்பு :

தஞ்சாவூர்

நடராஜ பிள்ளை உலகநாதன் M.A.B.T

குமரிப் பதிப்பகம்,

8 நீலா தெற்கு வீதி,

நாகப்பட்டினம் - 611 001.

Ph.: 04365-21472 Off.

04365-40543 Resi.





| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | ஸ்ரீ குரு தெட்சிணாமூர்த்தி<br>விளக்கம் ஸ்தலப் பெருமை;<br>ஸ்தோத்திரங்களுடன் |
| நூல் ஆசிரியர் | : | சிங்காரச் செல்வர்<br>நாகை *சி. அருண்குமார்* |
| நூல் உரிமை | : | பதிப்பாளருக்கு |
| பதிப்பாளர் | : | வீ. ஜவஹர் |
| அச்சிட்டுள்ள மொழி | : | தமிழ் |
| பதிப்பு விவரம் | : | முதற் பதிப்பு |
| பதிப்பு ஆண்டு | : | 2000 ஜூலை |
| தாளின் தன்மை | : | 11.6 கி.கி. |
| நூலின் அளவு | : | க்ரவுன் சைஸ் (18X12.5 செ.மீ.) |
| அச்சு எழுத்து அளவு | : | 11 புள்ளி |
| நூல் கட்டுமானம் | : | சாதாரண அட்டை பைண்டு (தையல்) |
| மொத்த பக்கங்கள் | : | 90 + 6 = 96 பக்கங்கள் 6 பாரம் |
| அட்டை அமைப்பு | : | ஜீவி மல்டி மீடியா,<br>நாகை. Ph.: 20876 |
| டைப் செட் | : | அரசன் வீடியோஸ்,<br>நாகை. Ph.: 24549 |
| அச்சிட்டோர் | : | ஸ்ரீ முருகன் ஆப்செட்,<br>சென்னை - 4. |


***விலை : ரூ. 24.00***

73-2

# முன்னுரை

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஜகத்குரு ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி மஹாஸ்வாமிகளின் அருள் விளக்கத்துடன் இந்நூல் தொடங்குகிறது.

ஸ்ரீ மஹா ஸ்வாமிகள் தம்முடைய தெய்வத் தன்மையால் அப்படியே தென்முகக் கடவுளை நம் கண் முன்னே கொண்டு வந்து நிறுத்தி விடுகிறார்கள். அதன் மூலம் அக்கடவுளின் அருளார்ந்த தரிசனம் நமக்குப் பரிபூரணமாகக் கிடைத்து விடுகிறது.. அம் மகிழ்ச்சியில் சில சிவ, வைணவத் தலங்களின் பெருமைகளையும், ஸ்தோத்திரங்களையும் ஸ்தோத்தரித்து இன்புறுகிறோம்...

இந்த இனிய அனுபவத்தை நமக்கு வழங்கியவர் குமரிப்பதிப்பகம் வீ. ஜவஹர் அவர்கள்.

அவர்களுக்கு உளங்கனிந்த நன்றி!

3.36, சிவன் மேல வீதி,
புத்தூர்.

*அன்பன்*
*சிங்காரச் செல்வர்.*
நாகை, சி. அருண்குமார்

# நவக்கிரக தலம்



திருச்சி
மதுரை
திருவானைக் காவல்
ஸ்ரீரங்கம்
சமயபுரம்
60 கி.மீ.
தஞ்சை
42
புதுக்கோட்டை
10
4
திருவையாறு
திங்களூர்
40 கி.மீ
வடக்கு
சுவாமிமலை
45 கி.மீ.
55 கி.மீ.
ஆலங்குடி
17 கி.மீ
கும்பகோணம்
15 கி.மீ
சூரியனார் கோயில்
நீடாமங்கலம்
திருநாகேஸ்வரம்
ஆடுதுறை
கஞ்சனூர்
திருமணஞ்சேரி
6 கி.மீ
திருவாரூர்
20 கி.மீ.
45 கி.மீ.
பேரளம்
20 கி.மீ
மயிலாடுதுறை
வைத்தீஸ்வரன் கோயில்
6 கி.மீ
18 கி.மீ
22 கி.மீ.
திருநள்ளாறு
10 கி.மீ.
சீர்காழி
திருவெண்காடு
நாகூர்
5 கி.மீ
நாகை
வேளாங்கண்ணி
வேதாரண்யம்
காரைக்கால்
திருக்கடையூர்
20
12 கி.மீ.
5
பெரும்பள்ளம்
3 கி.மீ
பூம்புகார்

T. N. Jaganathan

## தட்சிணா மூர்த்தி

(ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஜகத்குரு ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி மஹா ஸ்வாமிகள் அருளியது.)

தட்சிணாமூர்த்தி விச்வரூபத்தை மகிரிஷிகள் எல்லாரும் பிரத்தியட்சமாகத் தரிசனம் பண்ணுகிற காலத்தில், அந்தத் தட்சிணாமூர்த்தியின் ஸ்வரூபத்தைப் பற்றிச் சொன்னதாக ஒரு சுலோகம் இருக்கிறது. அது பரம்பரையாகப் பெரியோர்கள் நாளிலேயிருந்து வந்து கொண்டிருக்கிறது.

*சித்ரம் வடதரோர் மூலே வ்ருத்தா; சிஷ்யா: குருர் யுவா!*
*குரோஸ் து மௌதம் வ்யாக்யாநம் சிஷ்யாஸ் துசிந்நஸம்சயா :!!*

என்பது தான் அந்தச் சுலோகம்.

ஓர் ஆலமரத்தடியில் சின் முத்திரையைக் காட்டிக் கொண்டு மௌனமாக உட்கார்ந்திருக்கிறார் குரு. சிஷ்யர்கள் எல்லோரும் சுற்றி உட்கார்ந்திருக்கிறார்கள். ஒவ்வொரு சிவன் கோவிலிலும் தட்சிணாமூர்த்தி என்கிறவர், தென்னண்டைப் பிரகாரத்தில் சுவரிலேயே இருக்கும் ஒரு புரையில் தெற்கே பார்த்துக் கொண்டு, எப்பொழுதும் அமர்ந்து இருப்பதைப் பார்க்கலாம். எல்லா மூர்த்திகளைக் காட்டிலும் சாந்தமானமூர்த்தி தட்சிணாமூர்த்தி.

ஆனால் சாந்தமாக ஆலமரத்தடியில் அவர் உட்கார்ந்திருக்கும் போது, அந்த ஜடைகள் எல்லாம் அப்படியே கீழே தொங்கிக் கொண்டு, ஒரு ஜடாமண்டலமாக இருக்கின்றன. அவை தாமே அப்படி அமைந்து, தொங்கி, மூடிக்கொண்டிருக்கின்றன. அதிலே ஒரு சந்திரகலை. அது தான் ஞானத்தின் கலை. ஞானம் என்றால், மேலே மேலே வளர்ந்துக் கொண்டே இருக்க வேண்டும் என்பதற்கு அடையாளமாக, மூன்றாம் பிறைச் சந்திரனைச் சிரசில் தரித்துக் கொண்டிருக்கிறார். ஜடாமண்டலம் எல்லாம் கீழே தொங்க, அதில் மூன்றாம் பிறைச் சந்திரன் பிரகாசிக்க, ஓர் ஆலமரத்தடியில் மிகவும் சாந்தமாக அமர்ந்திருக்கும் மூர்த்தி

தட்சிணாமூர்த்தி. அந்த சாந்த மூர்த்தியைப் பார்த்தவுடனேயே நமக்கும் தானாகவே சாந்தம் வந்துவிடும். நாம் தென்னண்டைப் பிரகாரத்திற்கு வந்து, சாந்தமாக இருக்கும்படியான தட்சிணாமூர்த்தியைத் தரிசனம் பண்ணும்போது நமக்கும் சாந்தம் வந்துவிடுகிறது. "மனோவேகம் இல்லாமல் சாந்தமாகக் கொஞ்சம் உட்கார்ந்து விட்டுப் போ" என்று, சொல்வதுபோல உட்கார்ந்து கொண்டிருக்கிறார். அங்கே கேள்வி கேட்க வேண்டாம். பதில் சொல்ல வேண்டாம். சந்தேக நிவிருத்தி வேண்டாம். மௌனமாக, சாந்தமாக நாமும் அங்கே உட்கார்ந்துவிட வேண்டியதுதான்.

சிவன் கோவில்களுக்குப் போய்ப் பார்த்தால் தெரியும். தென்னண்டைப் பிரகாரத்தில் இருக்கும் ஒரு புரையில் தெற்குப் பார்த்துக்கொண்டு அவர் உட்கார்ந்திருப்பார். அவர் ஒரு சித்திரம் போல் இருக்கிறார். ஜடை நிறைய இருக்கும். ஓர் ஆலமரம் கருங்கல்லால் செதுக்கி வைத்திருப்பார்கள். அந்த ஆலமரத்தடியில் அவர் உட்கார்ந்திருப்பார். அவரைச்சுற்றி எலும்புக் கூடு போல சில ரிஷிகள் இருப்பார்கள். உடலோடு உடலாக, தோல் ஒட்டிக் கொண்டிருக்கும் படியாக அந்த ரிஷிகள் உருவம் இருக்கும். அநேக ஊர்களில் நான்கு ரிஷிகள் இருப்பார்கள். காஞ்சி மண்டலத்தில் மாத்திரம் சப்தரிஷிகள் இருப்பதாக வைத்திருக்கிறார்கள்.

அந்த ரிஷிகள் எத்தனையுக யுகாந்தரங்களாகத்தபஸ் பண்ணிக் கொண்டிருக்கிறார்களோ தெரியாது. அவர்கள் சரீரத்தில் எலும்பு தான் இருக்கிறது.

அந்தத் தபஸ்விகள் எல்லாம் இதற்காகத் தான், எத்தனையோ காலமாகத் த்வம் பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். உடம்பில் சதையே இல்லை. எலும்புகளே இருக்கின்றன. அந்த மகரிஷிகள் எலும்புக் கூடுகளாக இருந்து கொண்டிருக்கிறார்கள்.

வெறும் எலும்பு மாத்திரம் உள்ளவர்களாகத் தபஸ் பண்ணிக் கொண்டிருந்த மகரிஷிகள், கடைசியாக எந்த ஆனந்த சாந்த ஸ்வரூபத்திடம் வந்தார்கள்? சாக்ஷாத் ஈசுவரர், தட்சிணாமூர்த்தியாக ஆலமரத்தடியில் உட்கார்ந்து ஞானப் பிரதானம் செய்து கொண்டிருக்கிறரே, அவரிடம் வந்தார்கள். இவ்வளவு நாட்கள் தபஸ் பண்ணினதன் பயனாக அவர்களுக்குத் 'தட்சிணாமூர்த்தி உருவம் கண்ணில்பட்டது.

"எவ்வளவு சாந்தம்! என்ன ஆனந்தம்!" என்று அப்படியே அவர்களும் சாந்தஸ்வரூபிகளாக, ஆனந்த அநுபவத்தில் ஈடுபட்டு இருந்து விட்டார்கள்.

வடதரு என்றால் ஆலமரம். "ஆலமரத்தடியில் என்ன சித்ரம்!" என்று அவர்கள் ஆச்சரியப்படுகிறார்கள். சித்ரம் என்றால் ஆச்சரியம்.

குரு என்றால் நல்ல அநுபவம் உடையவராக, முதிர்ந்த கிழவராக இருப்பார். சிஷ்யர்கள் இளமை உடையவர்களாக யௌவனமுள்ளவர்களாக இருப்பார்கள். ஆனால் இங்கே சிஷ்யர்கள் எப்படி இருக்கிறார்கள்?

## வ்ருத்தா: சிஷ்யா:

சிஷ்யர்கள் விருத்தர்களாக, கிழவர்களாக இருக்கிறார்கள். தலைகளெல்லாம் நரைத்துக் கிடக்கின்றன. உடலிலே சதையே இல்லை. எலும்புதான் இருக்கிறது. மிகவும் வயதான கிழவர்கள். எத்தனை வயது அவர்களுக்கு இருக்கும் என்று சொல்லமுடியாத தொண்டு கிழவர்களாக, எலும்போடு கூடியவர்களாக இருக்கிறார்கள். எத்தனை காலமாக அவர்கள் இப்படித் தபஸ் செய்துகொண்டிருக்கிறார்கள் என்றே சொல்ல முடியாத, விருத்தாப்பியர்களாக இருக்கிறார்கள். ஆனால் குரு எப்படி இருக்கிறார்கள்?"

## குருர் யுவா

குருவோ நல்ல யௌவன வயது உடைய்வராக, என்றும் பதினாறு வயது உடையவரைப் போலவே இளமை மாறாமல், மிகவும் சாந்தத்தோடு கண்ணை மூடிக் கொண்டு உட்கார்ந்திருக்கிறார். சிஷ்யர்கள் கிழவர்கள்: குருவோ யௌவன தசை உள்ளவர். இது ஆச்சரியம் அல்லவா?

கிழவர்கள் இந்த யௌவன வாலிபனுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பதா? இந்த யௌவன வாலிபனிடத்தில் கிழவர்கள் பாடம் கற்பதா? 'சரி, ஒரு கால் இந்தக் கிழவர்கள் படிக்காதவர்களாக இருந்திருக்கக் கூடும். சின்னப் பையனாக இவன் இருந்தாலும் நிரம்பப் படித்தவன் போல் இருக்கிறான். அதனால் தான் இவனிடத்தில் அவர்கள் பாடம் படிக்க வந்திருக்கிறார்கள்' என்று வைத்துக் கொள்வோம். பாடம் சொல்லிக் கொடுப்பது எப்படி? ஞானம் வர வேண்டுமென்றால் ஒவ்வொரு

தத்துவத்தையும் எடுத்து, அலசி அலசிப் பார்த்து உண்மையைச் சொன்னால் அல்லவா சிஷ்யர்களுக்கு வித்தை வரும்? ஞானம் உண்டாகும்? இந்தக் குரு எப்படிச் சொல்லிக் கொடுக்கிறார்?

## குரோஸ் து மௌநம் வ்யாக்யாநம்

குரு வாயை மூடிக் கொண்டிருக்கிறார். மௌனந்தான் அவருடைய உபந்நியாசம்.

இங்கே வியாக்யாநம் என்றால் உபந்நியாசம் என்று அர்த்தம். குரு என்ன 'லெக்சர்' செய்கிறார்?

## குரோஸ் து மௌநம் வ்யாக்யாநம்

குரு மௌன லெக்சர் செய்கிறார். ஒன்றுமே பேசாமல் மௌனமாக சாந்தமாக உட்கார்ந்திருக்கிறார். சாந்தமாகி விட்டால் அப்புறம் மௌனந்தானே? அவர் சாந்தமாக, மௌனமாக உட்கார்ந்து கொண்டிருப்பதே மற்றவர்களுக்குப் பெரிய உபதேசமாக இருக்கிறது. வாய் திறந்தால் சந்தேகம் அதிகமாக உண்டாகிவிடும். அதனால் அவர் வாய் மூடிக் கொண்டு மௌனியாக உட்கார்ந்து விட்டார்.

என்ன என்னவோ சந்தேகங்களை அவர்கள் எழுப்பிக் கொண்டு வந்தார்களே. அவை எல்லாம் அந்தச் சாந்த ஸ்வரூபத்தைக் கண்டவுடனே நிவிருத்தியாகி, அப்படியே மௌனிகளாக உட்கார்ந்து விட்டார்கள். ஒரு கேள்வி கூட கேட்க வில்லை. ஒரு பதில் கூட இல்லை. நிறைந்த ஆனந்தம். சாந்தம் தான் எல்லாச் சந்தேகங்களையும் நிவிருத்தி செய்து விடும். ஒன்றையும் கேட்காமல் அப்படியே சாந்தமாக, அந்தச் சாந்த ஸ்வரூபியைக் கண்டவுடன், அவர்கள் நின்று விட்டார்கள். இத்தனை நாள் தபஸ் பண்ணினதன் பலனாக, அவர்களுக்கு இப்போதுதான் இந்தத் தரிசனம் கிடைத்தது. இந்த ஆனந்தம், இந்த சாந்தம் எல்லாம் உண்டாயிற்று.

சாட்சாத் பரமேசுவரர் ஒரு காரியமும் இல்லாது, அசையாத மனத்தோடு, கண்ணை மூடிக் கொண்டு, சாந்தமாக, ஆனந்த நிலையிலே அமர்ந்துவிட்டார். அவருக்கு யௌவனம் எப்போதும் மாறாமல் இருக்கிறது. புஷ்டியான யௌவன உடம்பாதலால், சிகை வளர்ந்து

அப்படியே ஜடையாக விழுந்து கிடக்கிறது. எத்தனையோ யுகாந்தரமாக அவர் அப்படி உட்கார்ந்திருக்கிறார். தட்சிணாமூர்த்தி நிறைந்த சாந்தஸ்வரூபர். அவருக்கு வேண்டியதென்று ஒன்றுமில்லை. அதனால் ஒரு காரியமும் இல்லாமல், மனம் சலிக்காமல், சாந்தமுள்ளவராக அவர் காணப்படுகிறார். காலம், தேசம் என்ற வரையரையின்றி, எப்போதும் பரிபூர்ணமாக, அழகு நிரம்பியவர்களாக, சாந்தம் அடைந்தவர்களாக அப்படியே நின்று விட்டார்கள். ஒரு கேள்வி கூட இல்லை. அவரும் ஒரு வார்த்தை கூட பேசவில்லை. தம்முடைய சாந்தமான, ஆனந்தமான நிலையை உபதேசமாகச் செய்து கொண்டு மௌனமாக அவர் இருக்கிறார். அவருடைய மௌனமே ஒரு பெரிய உபதேசமாகி விட்டது.

## *சிஷ்யாஸ் து சிந்நஸம் சயா:*

சிஷ்யர்களோ, குருவை ஒரு கேள்வி கேட்காமல், அவர் காட்டுகிற சின்முத்திரையினாலேயே சந்தேகம் நிவிருத்தியானவர்களாக, சாந்தம் நிரம்பியவர்களாக, ஆனந்தம் உண்டானவர்களாக அப்படியே இருந்து விட்டார்கள்.

ஆலமரத்தடியில் இப்படிக் காட்டிக் கொண்டு, அவர்கள் மௌனமாக, 'என் அனுபவத்தையே கண்டு கொள்ளுங்கள்' என்பது போல உபதேசம் செய்யாமல் செய்கிறார்.

ஆலமரத்தின் கீழ் இவரும் ஆலமரம் போல் இருக்கிறார். ஆலமரம் என்றால் விழுதுகள் இருக்கும். அதுபோல் இந்த பழுத்த ஆலமரத்தில் ஜடைகள் விழுது விழுதாக வளர்ந்து தொங்குகின்றன. அநாதியான தத்துவத்திற்கு இது அறிகுறி ஆலமரம் என்றால் பால் இருக்கும். இவர் முகத்தில் பால் வடிகிறது. யௌவன அழகு. சாந்தமான ஆனந்த அழகு வடிந்து கொண்டிருக்கிறது. விருத்தர்களான சிஷ்யர்களோ இந்தத் தட்சிணாமூர்த்தியைச் சுற்றி எலும்புக் கூடு போல இருக்கிறார்கள். இதைத்தான் அந்தச் சுலோகம் அப்படியே படம் பிடித்தாற்போல எடுத்துக் காட்டுகிறது.

*சித்ரம் வடதரோர் மூலே வ்ருத்தா : சிஷ்யா : குருர்யுவா*
*குரோஸ் து மௌநம் வ்யாக்யாநம் சிஷ்யாஸ் து சிந்நஸம் சயா*

அவருடைய அனுபவம் பூர்ணமான ஆத்ம ஸ்வரூபந்தான் இரண்டற கலந்த ஒரே ஆனந்த நிலை தான். அந்த நிலையில் அவர் உட்கார்ந்திருக்கிறார். அவருடைய ஆத்மானந்த ஸ்வரூபத்தை அனுசரித்துக் கையில் சின்முத்திரை தானாக அமைந்திருக்கிறது. பிறருக்குக் காட்டுவது கூட இல்லை. அது தான் அவர் அனுபவம். பேசாத மௌனியாக, சாந்தத்தோடு, ஆனந்தத்தோடு, இளமையோடு அவர் கண்களைப் பாதி மூடிக் கொண்டு யாரையும் பார்க்காமல் உட்கார்ந்திருக்கிறார். அந்த அனுபவத்தைப் பார்த்தவுடனே ரிஷிகளாகிய சிஷ்யர்களுக்கு எல்லாச் சந்தேகமும் போய்விட்டது. அப்படியே ஆனந்த பரவசர்களாகி விட்டார்கள்.

குருவினுடைய மௌனமே நமக்கு வ்யாக்யானம். அந்த மௌனம் என்ற வியாக்யானத்தினால் தானே பிரகாசிக்கிறது (பிரகடித) பரப்ரஹ்மதத்வம். அந்தச் சிஷ்யர்களுக்கு எத்தனை வயது என்றே சொல்ல முடியாமல் இருக்கிறது. பிரம்மநிஷ்டர்களாக இருக்கிற மஹரிஷிகள் எலும்பும் தோலுமாக இருக்கிறார்கள். குரு என்றும் பதினாறு வயதுடையவராக இருக்கிறார்.

மற்ற மூர்த்திகள் எல்லாம் அப்படி இல்லை. ஏதாவது ஒரு குறை, அந்தந்த மூர்த்தியிடம் இருப்பது போல தோன்றும். கோபம், வீரம் இப்படி ஏதாவது ஒன்று இருக்கும். நம்முடைய குறைகளை நிவிருத்திக்க, அந்த மூர்த்திகளும் தங்களைக் குறைத்துக் கொண்டு இறங்கி வருகின்றன. அதனால்தான் அவதாரம் என்று சொல்கிறோம். அவதாரம் என்றால் கீழே இறங்குவது என்று பொருள். கீழும் இறங்காமல், மேலேயும் ஏற இடமில்லாமல் தம் ஆத்மானுபவ நிலையிலேயே இருப்பவர் தட்சிணாமூர்த்தி.

அவர் அப்படி உட்கார்ந்திருப்பதனாலே அவர் ஒரு காரியத்தையும் செய்யவில்லை. ஆனால் எல்லாக் காரியங்களும் தாமே நடந்து கொண்டிருக்கின்றன. சூரியன் உதயமாகிவிட்டான் என்றால் பட்சிகள் கூட்டை விட்டுப் பறந்து போகின்றன. ஜனங்கள் எழுந்திருந்து பல காரியங்களைச் செய்ய ஆரம்பித்து விடுகிறார்கள். சுறுசுறுப்பாக அவரவர்கள் அவரவர்களுக்கிடையே காரியத்தைக் கவனிக்க ஆரம்பித்து

விடுகிறார்கள். உலகத்தில் அநேக காரியங்கள் நடைபெறுகின்றன. ஆனால் சூரியன் அந்தக் காரியத்தை செய்யவில்லை. அவன் பிரகாசித்த உடனே எல்லாக் காரியங்களும் இவன் சந்நிதானத்திலே நடைபெறுகின்றன.

அப்படியே இந்தக் குருவும் மனம் அசையாமல், தமக்கு ஒரு காரியம் என்பது இல்லாமல், ஆனந்த நிலையில் மௌனமாக உட்கார்ந்து கொண்டிருக்கிறார். அவருடைய சந்நிதானத்திலே எல்லாத் தத்துவங்களும் தாமே பிரகாசித்துக் கொண்டிருக்கின்றன. அவர் ஒன்றைக் கூட உபதேசம் செய்யவில்லை. மௌனமாகவே தம் பாட்டுக்கு இருக்கிறார். ஒரு குறையும் இல்லாமல் அப்படி சாந்தமாக, அடங்கின ஆனந்த நிலையிலே, அவர் இருப்பதைத் தரிசனம் பண்ணின மாத்திரத்தில் ஆனந்தம், சாந்தம் எல்லாம் மற்றவர்களுக்கு நிறைந்துவிடுகின்றன. ஒரு கேள்வி கேட்க வேண்டும் என்று தோன்றவில்லை. ஒரு சந்தேகத்தை நிவிருத்தி செய்துக் கொள்ளலாம் என்று பேச்சு இல்லை. குருவையே பார்த்துக்கொண்டு, இவர்களும் மௌனமாக இருக்கிறார்கள். குருவும் மௌனமாக, இரண்டு விரல்களை ஒன்றாகச் சேர்த்து வைத்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறார்.

இந்த அத்வைத தத்துவாநுபவத்தைத்தான், தான் எல்லாமாய் இருக்கிற நிலையில் இருந்து கொண்டே, சாந்தமான மூர்த்தியாகி, இரண்டு என்பது ஒன்றுதான் என்ற உண்மையை, இரண்டு விரல்களையும் ஒன்றாக சேர்த்து வைத்துக் கொண்டிருக்கும்படியான சின் முத்திரையினால் பிறருக்கு விளங்க வைக்கிறார். அவர் தரிசன அனுபவத்தினாலேயே மாயை நீங்கிப் போகிறது. சாந்தம், ஆனந்தம், அத்வைத ஞானம் எல்லாம் உண்டாகி விடுகின்றன. ஆனந்த சமுத்திரத்திலே நாம் கலந்து விடுகிறோம்.

நன்றி : கலைமகள்.

## குரு ஸ்தலம் : 1

## *குரு மகா தரிசனம்*

## *ஆலங்குடி*

ஆலங்குடி ஒன்றே குருபகவானுக்குரிய பெருந்தலமாக விளங்குகிறது. குரு மூர்த்தம் இங்கே அத்தனை விசேடமாகும்.

பாற்கடல் கடைந்தபோது உண்டான ஆல கால விஷத்தைக் குடித்து தேவர்களைக் காத்து அருள் செய்த மூர்த்தி வீற்றிருக்குமிடம் ஆலங்குடி என்ற பெயராகியிருக்கிறது. அதே போல் இங்குவந்து வழிபடுவோர்கள் குறைகளை நிவர்த்தி செய்து பெருமான் ரட்சித்து வருகிறார். இரும்பூளை என்பது இத்தல தேவாரப் பெயராகும். இப்பெயர் வழக்கொழிந்து ஆலங்குடி என்றே அவனியில் சிறந்த குருஸ்தலமாக விளங்கி வருகிறது. அதற்கேற்ப இங்குள்ள இறைவனும் ஆபத்சகாயேசுவரர் என்ற பெயரிலேயே காட்சி அளிக்கிறார். இங்கு வழிபடுவோருக்கு ஆபத் பாந்தவனாக உதவும் தன்மையுடையவர் என்பது புலனாகிறது. அம்பிகை ஏலவார்குழலி எழிலார் வனப்புடன் அருளை வழங்கி நிற்கிறார். இங்கே குரு பகவானாகிய தெட்சிணாமூர்த்திக்கு உற்சவ வடிவமும் காணப் பெறுவது சிறப்பு.

இங்கே குரு பகவானை வழிபடுவோர் அவருக்கு 24 நெய் தீபமிட்டு வணங்குதலை நியதியாகக் கொண்டிருக்கின்றனர்.

நவக்கிரக்கிரங்களில் குருவாக விளங்கும் வியாழகுரு இந்த குரு தட்சிணாமூர்த்தியுள் ஒடுக்கம் என்பதால் இங்கே தட்சிணாமூர்த்தி சந்நிதி தனி மகத்துவத்துடன் விளங்குகிறது. வியாழன் தோறும் விழாச் சிறப்போடு கோவில் களைக்கட்டி நிற்கிறது.

## குரு ஸ்தலம் : 2

## *வியாழபகவான் உறைந்தருளும்*

## *திருத்தென்குடித்திட்டை*

குருத்தலமாகிய திட்டையில் வியாழபகவான் தனிச்சந்நிதியில் எழுந்தருளியிருந்து நாளும் அருள் புரிந்து வருகிறார்.

வியாழ பகவானுக்கு இவ்விதம் தனிச் சந்நிதி அமைந்துள்ள இத்திருத்தலமானது திருத்தென்குடித் திட்டை என்ற பெயரில் விளங்குகிறது.

இது ஓர் பாடல் பெற்ற தலம். கும்பகோணம் தஞ்சாவூர் இருப்புப்பாதையில் திட்டை இரயில்வே நிலையத்தில் இறங்கி மேற்கே 2 கி.மீ. தூரம் செல்ல வேண்டும். அல்லது தஞ்சாவூரிலிருந்து திருத்தருகாவூர் செல்லும் பேருந்தின் மூலமாகவும் செல்லலாம். கோவிலை ஒட்டியே தார்ச் சாலையும் அமைந்துள்ளது.

இங்கே குளம் அழகு; கோவில் அழகு; கருங்கல் திருப்பணி அழகு; சிற்ப வேலைகள் அழகு. இத்தகைய அழகார்ந்த கோவிலில் குரு பகவானுக்கு உரிய தனிக்கோவில் இருப்பது ஓர் தனி அழகு.

இறைவருக்கு எட்டு விதமான பெயர்கள் அமைந்துள்ளன. அவற்றுள் வசிஷ்டேசுவரர் என்பது பிரசித்தம். அம்பிகை மூன்று பெயர்களில் குறிக்கப் பெறுகிறார். இவற்றுள் உலக நாயகி என்பது விசேசம். ஏழு விதமான பெயர்கள் தலத்துக்கு அமைந்துள்ளன. மூன்று விதமான தீர்த்தங்கள் அமைந்துள்ளன. தேவாதி தேவரும் தேவ மங்கையர்க்ளும் அத்தலத்தில் நிழல் தரும் தருக்களாக நிற்பதாக ஐதீகம்.

இங்கே வழிபடாத கடவுளர்களே இல்லை. ரிஷிகளில் பலரும் இத்தலத்தை வந்து வழிபட்டுள்ளனர்.

இங்குள்ள இறைவனை வழிபட்டால் ஞானம் பெருகும். இறைவியை வழிபட்டால் தம்பதியர்களுக்குள் ஒற்றுமை நிலவும். இத்தலத்தில் குடி கொண்டுள்ள புஷ்டி விநாயகரின் அருளால் இந்திரன் அகத்தியரின் குடத்திலிருந்த காவேரியை வெளிக்கொணர முடிந்தது. இங்குள்ள முருகப் பெருமானை வழிபட்டால் பரஞானம் கூடும்; அப்பெருமையை உணரத் தக்கதான வல்லமையை அவர் வழங்குவார்.

இது குரு பகவானுக்குரிய திருத்தலமாக உள்ளதனால் குருப்பெயர்ச்சிக் காலங்களிலும், வியாழக் கிழமைகளிலும் மக்கள் பெருந்திரளாக வந்து வணங்கி அருள் பெறுகின்றனர்.

## குரு ஸ்தலம் : 3

## *தேவகுரு வழிபட்ட திருத்தேவூர்*

தேவகுரு வழிபட்டதம் தேவூர் ஆகும். இவ்வூருக்குக் கீழ்வேளூரிலிருந்து தெற்கே மூன்று கி.மீ செல்ல வேண்டும். இப்போது

நாகை திருவாரூர் முதலான இடங்களிலிருந்து டவுன் பஸ் வசதி பெருகிவிட்டதனால் வசதி போல் எந்த மார்க்கத்தினின்றும் சென்று வரலாம்.

ஞான சம்பந்தரின் தேவாரத்தை நோக்கும் போது ஒரு காலத்தில் இவ்வூர் மாட மாளிகைகள் மிகுந்த ஊராகவே இருந்து இருக்கிறது. அருணகிரியார் இவ்வூரைத் தேவனூர் என்று பேசுவது சிறப்பு.

இந்த தேவனூரின் இறைவன் தேவபுரீசுவரர் ஆவார். எல்லா தேவர்களும் இப்பதியைப் பணிந்தவராகவேயிருக்கின்றனர். அம்பிகையின் திருநாமம் இனிது. அவர் இத்தலத்தில் தேன் மொழி என்று பெயர் தாங்கியிருக்கிறார்.

கோவில் மிகவும் அழகியது. சுவாமி கட்டு மலை மீது அமர்ந்திருக்கிறார். அக்கட்டுமலையில் தலவிருட்சமாகிய வாழையையும் காணலாம்.

தாய்ப்பசுவை இழந்த கன்று ஒன்று தாயின் நினைவால் கதறிட, தேவூர் இறைவன் அதன் தாய்ப்பசு வடிவம் தாங்கி வந்து அருள் புரிந்திருக்கிறார். இச்சிறப்பை மாணிக்கவாசகர்,

*தேவூர்த் தென்பால் திகழ் தருதீவில்*
*கோவார் கோலங் கொண்ட கொள்கையும்*

என்று திருவாசகம், கீர்த்தித் திருவகலில் குறிப்பிட்டுள்ளார். இத்தலத்து மூர்த்தியை இந்திரன், குபேரன், கௌதமர், அகலிகை, முதலானவரும், பிரகஸ்பதியாகிய தேவகுரு வழிபட்ட தலம் ஆதலால் மூர்த்தி, தல, தீர்த்தம் எல்லாம் அவர் பெயராலேயே வழங்குகிறது. கோவிலுக்குத் தென் கிழக்கு மூலையில் இருப்பது தேவதீர்த்தம் ஆகும்.

இங்கே தட்சிணாமூர்த்தி சந்நிதி மிக விசேடம். விஷேடத் தினங்களில் இவரது சந்நிதி அமர்க்களப்படுகிறது. குருவருள் பெற வேண்டுவோர் தேவூர் தெட்சிணா மூர்த்தியை வணங்கி மகிழலாம்.

## குரு ஸ்தலம் : 4

## *நெஞ்சில் நிறைந்த திருப்புறம் பயம்*

திருப்புறம் பயத்துக்குக் கும்பகோணத்தில் இருந்து மிகுந்த டவுன் பஸ் வசதி இருக்கிறது.

இத்தலம் காலத்தை வென்ற சிறப்பினோடும் பிரளயத்தையும் மீறி நிலை களம் கொண்டிருந்த பெருமையினோடும் விளங்குகிறது.

அழகும், அருளும் நிரம்பிய பழமையான கோவில். இறைவன் சாட்சி நாதர் என்ற பெயரில் எழுந்தருளியிருக்கிறார். ஆதரவற்ற ஓர் செட்டிப் பெண்ணுக்கு ஆதரவு கரம் நீட்டி அவள் பொருட்டு சாட்சி சொல்ல வேண்டி வந்ததால் சாட்சி நாதர் ஆனார். அம்பாள் கரும்பன்ன சொல்லம்மை, பக்தர்களுக்கு அருள் செய்யும் பாங்கில் இவர் ஓர் கட்டிக் கரும்பேதான். இங்கே வருணன் கடல் பொருட்களால் உண்டாக்கிய விநாயகர் பிரசித்தம். இவரே இத்தலத்தைப் பிரளயத்திலிருந்து காத்தருளியிருக்கிறார். விநாயகர் சதுர்தியன்று இவர் குடங்கணக்கில் தேனாபிஷேகம் கண்டு அருள்வது சிறப்பு. அத்தேனோ மணலால் ஆன இவர் வடிவத்துக்குள்ளேயே சுவர்ந்து கொள்வது விந்தை. இந்த தேன் விநாயகர் ஓர் அரிய காட்சி. இதனிலும் ஓர் தெய்வ மாட்சி தான் ஆலமர் செல்வர் தரிசனம்.

கோவிலின் முன்னே வலப்புறம் காணப்படும் தீர்த்தக் குளக்கரையில் அழகிய சிறு கோயிலொன்று காணப்படுவதைப் பார்க்கலாம். அக்கோவிலின் எழில் வாய்ந்த மூர்த்தி தான் தெட்சிணாமூர்த்தி.

இங்குள்ள மூர்த்தி அறமுரைத்த நாயனார் என்றே அழைக்கப் பெறுகிறார்.

"புறம்பயம் அதனில் அறம்பல அருளியும்" என்று மாணிக்க வாசகர் திருவாசகம் – கீர்த்தித் திருவகவலில் கூறியிருப்பதையும் "நால்வர்களும் பயனுரைத்தானை புறம்பயம் அமர்ந்தோய்" என்று சம்பந்தரும் பாடியிருப்பதைப் பார்க்கலாம்.

பெருமான் ஆலின் கீழ் எழுந்தருளி சனகர் முதலான முனிவர் நால்வருக்கு மெய்ப்பொருள் உணர்த்திய தலம். எனவே புறம்பயம் சென்றும் குருவைப் போற்றி வரலாம்.

## குரு ஸ்தலம் : 5

## *வான் புகழ் வள்ளலார் கோவில்*

மூர்த்திச் சிறப்பும், தீர்த்தச் சிறப்பும் அமைந்த திருநகரம் மயிலாடுதுறையாகும். "ஆயிரமானாலும் மாயூரம் ஆகாது" என்னும் பழமொழியைப் பெற்ற பெருநகரம் இது.

இங்குள்ள மாயூரநாதர் கோவில் மகோன்னதமானது. தக்க யாகத்தால் கருத்து வேறுபாடு கொண்ட அன்னை இவ்வூரில் மயில் உருவம் எடுத்து இறைவனை பூசிக்க வேண்டியதாயிற்று.

இங்குள்ள காவிரியின் தெற்குக் கரையில் உத்தர மாயூரம் என்ற பெயரோடு வான் புகழ் வள்ளலார் கோவில் இருக்கிறது. கைகாட்டும் வள்ளல் என்பதற்கொப்ப இத்திருக்கோவிலின் தட்சிணா மூர்த்தி சந்நிதி மிகுந்த சிறப்பினோடும் விளங்குகிறது.

பெருமானைத் தாங்கும் வலிமை தனக்கு மட்டுமே இருப்பதாக நினைத்தார் இடபதேவர். 'தன் அருள் இல்லாவிட்டால் தனது ரோமத்தைக் கூட சுமக்க முடியாது' என்று இறைவன் இடப தேவருக்கு உணர்த்தினார். உண்மை உணர்ந்த இடப தேவருக்கு இறைவன் ஞானோபதேசம் செய்தார். இவ்விதம் இடபதேவர் எம்பெருமானை குரு மூர்த்தமாகக் கொண்டிலங்கும் ஸ்தலம் இது. இங்கே எம்பெருமான் இடப தேவரின் மீது அரோகணித்து இருப்பது அழகும் அற்புதமும் நிறைந்ததாகும். வியாழன் தோறும் மக்கள் பெருமளவில் வந்து வழிபடும் தலம் இது.

மயிலாடுதுறை துலாக்கட்டமாகிய இடபத் தீர்த்தக் கரையில் வடபக்கத்திலே உள்ள இக்கோவில், தீர்த்த மண்டபத்தையும், சிறிய கோபுரத்தையும் கொண்டு பெருமான் வழிகாட்டும் வள்ளலாராகவும், பெருமாட்டி ஞானாம்பிகையாகவும் எழுந்தருளியிருந்து மக்கட் சேவை புரிந்து வருகின்றனர்.

## குரு ஸ்தலம் : 6

## *திருவருள் தரும்பும் திருவீழிமிழலை*

குருவருள் பெறுவதற்கு சிலர் திருவீழி மிழலையையும் குறிப்பிடுவதுண்டு. இங்கே ஒவ்வொரு மூர்த்தியும் ஒவ்வொரு வரலாறும், ஒவ்வொரு நிகழ்வுகளும் அதிசயமாய் அற்புதமாய் ஆனந்தமாய் இருப்பது இயல்பு.

பூந்தோட்டத்திலிருந்து நாச்சியார் கோவிலுக்கு செல்லும் பஸ்கள் இவ்வூர் வழியாகச் செல்கின்றன.

வீழிச்செடி என்னும் ஒரு வகைச் செடிகள் மலிந்திருந்தமையால் வீழிமிழலை என்று பெயர்.

திருமால் தன் கண் மலர்களில் ஒன்றைப் பறித்து பூவாக இறைவனை அருச்சித்த இடமாதலால் திருவிழி அதாவது கண் மிழலை என்பதே திருவீழி மிழலை என்றாயிற்று என்றும் கூறுவர்.

இங்கே கோவில், மண்டபம், மூர்த்தி எதைப் பார்த்தாலும் வியப்பே தோன்றும். இங்குள்ள வௌவால் நத்து மண்டபம் அக்கால சிற்பிகளின் கலைத்திறனை வெளிப்படுத்திக் கொண்டிருப்பதைப் பார்க்கலாம்.

மூலஸ்தானத்தில் எழுந்தருளியிருக்கும் சிவலிங்க மூர்த்திக்கு வீழிநாதர் என்று திருநாமம். மூலஸ்தானத்தில் உள்ளே சிவலிங்கத்தின் பின்னால் இறைவன், இறைவி நின்ற திருக்கோலத்தில் எழுந்தருளியுள்ளனர்.

இங்கே விண்ணிழிந்த நாதர், பண் தயங்கு மொழியாள் இருவரும் அணிமணிகள் நிறைந்திட 'மாப்பிள்ளைச் சாமி' என்ற பெயரில் திருமணக் கோலத்துடன் காட்சி அளிக்கும் சந்நிதி இருக்கிறது. மக்கள் பெரிதும் உவந்து வந்து வழிபட்டு மணம் முதலாய காரிய வெற்றிகளை அடைகின்றனர்.

மகா விஷ்ணு விண்ணிலிருந்து கொண்டு வந்த விமானமே கோவிலாயிற்று என்பது நம்பிக்கை. இத்தலத்தின் கருவறை விமானம் அவசியம் காணத்தக்கது. அற்புத புதுமையுடையது. விமானத்தின் மேலே தோணியப்பர் திருவுருவம் காணப்படுகிறது. சம்பந்தருக்காக எம்பெருமான் சீகாழியிருக்கும் தோணியப்பர் கோலத்தைக் காட்டியருளினார் எனப்படுகிறது.

இத்தலத்துக்குப் பெருமை தரும் நிகழ்ச்சி, ஒரு காலத்தில் பஞ்சம் நிலவியபோது இறைவன் சம்பந்தர், அப்பர் இந்த இருவருக்கும் பொற்காசு அளித்துப் பஞ்சத்தால் வாடிய அடியார்களுக்கு அமுதளிக்கச் செய்தார் என்பதாகும். இங்கே வீழி மிழலையார் ஆலயம் தவிர வேறு சில கோவில்களும் இருக்கின்றன. அவற்றுள் அபிமுத்தீசர் கோவில் முக்கியமானது. குருவருளுக்காக வீழிமிழலையாரை வழிபடலாம் அல்லது அபிமுத்தீசரை வழிபடலாம். அப்படியொரு வழக்கம் இங்கே இருக்கிறது.

## குரு ஸ்தலம் : 7

## *அதிசயம் அதுதான்.. திரு இராமேஸ்வரம்*

சோழ நாட்டின் இந்த இராமேசுவரம் மன்னார்குடி திருத்துறைப்பூண்டி நெடுஞ்சாலையில் தட்டான் கோவில் என்ற ஊரின் பஸ் நிறுத்தத்தில் இறங்கி வடகிழக்காக இரண்டு கி.மீ. தொலைவு செல்கிறோம்.

அழகிய கிராமம். இயற்கை வளத்துடன் காணப்படுகிறது. பொழில் சூழ்ந்த பகுதியினூடே அதோ ஓங்கி உயர்ந்த கோபுரம் தெரிகிறது.

இலங்கையில் இராவணாவதத்தை முடித்துக் கொண்ட ஸ்ரீராமன் அசுரபூமியினின்றும் நீங்கி புண்ணிய பூமிக்கு வருகிறார். அவரது பொற்பாதம் பட்ட புனிதத்தால் இந்த ஊர் இராமேசுவரம் ஆகிறது.

கோவில் நீண்ட சதுரமாக அமைந்துள்ளது. கோவிலின் வலப்புறம் அமைந்துள்ள திருக்குளம் புனிதமானது. இங்கே கோவிலை விடவும் திருக்குளம் பெரிதாக அமைந்திருப்பதைக் காணலாம். இங்கே வந்து பிதுர்க்கடன் செய்வதை விஷேசமாகக் கருதுகிறார்கள். ஆடி, தை அமாவாசை தினங்களில் பிதுர்களுக்குத் தர்பணம் செய்வது விஷேடமாகும். அச்சமயங்களில் இங்கு வந்து கோதண்டதீர்த்தமாகிய இத்திருக்குளத்தில் நீராடி இராமநாத சுவாமியை வழிபட்டால் பிதுர்க்களால் ஏற்படக்கூடிய தோஷம் நீங்கும். அல்லாமலும் இக்குளத்து நீர் மருத்துவ குணமிக்கது என்பதனால் எல்லாவித உடற்பிணியும் நீங்கி விடுவதாகவும் இருக்கிறது. அனுமன் இத்திருக்குளத்தில் தவமிருந்தார் என்றும், பாதாளத்தினின்றும் கங்கையை ஏழு தீர்த்தக் கிணறுகள் வழியே மேலே கொண்டு வந்தார் என்றும், இன்றும் நதி தேவதைகள் இக்குளத்தில் வாசம் செய்வதாகவும் நம்பிக்கை நிலவுகிறது.

இக்கோவிலின் நாயகியாகிய ஸ்ரீமங்களநாயகியை வழிபட்டால் சுப காரியங்கள் நிகழ்கிறது. குறிப்பாக தொடர்ந்து ஏழு அமாவாசைக்கு அதிகாலையில் வந்து தீர்த்தத்தில் நீராடி இத்தல இறைவர், இறைவியாரை வழிபடுவதின் வாயிலாக தாங்கள் வேண்டும் வரத்தைப் பெறலாம் எனப்படுகிறது.

அம்பிகை சன்னதிக்கு எதிரே ராமர் தன் கோதண்டத்தால் உண்டாக்கிய தீர்த்தம் ஒன்றும் கிணறு வடிவில் இருக்கிறது. சுவை மிகுந்த நீர் இது. குரு பகவான் அருள் வேண்டி மக்கள் இங்கு வந்து பெரிதும் வழிபடுகின்றனர். இங்குள்ள தெட்சிணாமூர்த்தி சந்நிதி விஷேடமானது. இச்சந்நிதியில் எட்டு முனிவர்கள் காட்சியளிப்பது வேறு எங்கும் காண முடியாத காட்சியாக இருக்கிறது.

## குரு ஸ்தலம் : 8

# ஆரூரின் அருமறை இறைவர்

'நிறை செல்வத் திருவாரூர்...' தேரோடும் திருவாரூர்... சிறை வண்டார் பொழில் சூழ் திருவாரூர்... செல்வம் மல்கிய தென் திருவாரூர்.. தேசமல்கிய தென் திருவாரூர்... என்று நிறைமொழி மாந்தர் மறை வழிப் பேசும் பெருமையுடைய தலம்.

இத்தலம் வீராடபுருடனுக்கு மூலாதாரமாக அமைந்தது.

பிறக்க முக்தி தருவது..

ஐம் பெரும் பூதங்களில் மண் கடினமாய் எல்லாவற்றையும் தாங்கி நிற்பது போல், திருவாரூர் பிருதிவித் தலமாய் எல்லாவற்றையும் தாங்கி நிற்கிறது.

தஞ்சைத் தரணியில் பெரிய கோவில் இரண்டு. அவை தஞ்சைப்பெரிய கோவிலும் திருவாரூர்ப் பூங்கோவிலுமாம்..

நமக்குள்ள அவசரத்தில் மூலவர் வன்மீக நாதரையோ, தியாகேசப் பெருமானையோ, இறைவி கமலாம்பிகையையோ இப்போது தரிசிக்க நேரமில்லை. நமக்கு வேண்டியவர் இக்கோவிலின் வடக்குப் பிரகார சித்தீச்சுர கோவிலில் தெற்குப் பார்த்து இருக்கிறார்.

அவர் தான் கமலை ஞானப் பிரகாசருக்கு அருள் செய்த சித்தீச்சரம் தட்சிணா மூர்த்தி...

சித்தீச்சுரம் மேற்குப் பார்த்த சந்நிதி. அம்சன் என்னும் மன்னன் பஞ்சாட்சர ஜெபஞ்செய்து சித்தீசன் என்ற பெயரை அடைந்தான்...

சித்தீசனாகி அவ்வரசன் அசுரர் குருவாகிய சுக்கிராச்சாரியாரின் உபதேசப்படி இம்மூர்த்தியை ஸ்தாபித்து வழிபட்டான்..

ஓர் அந்தணச் சிறுவன் சடாஷரத்தை ஓதி முனிவர் சாபம் தீர்த்தான். இங்கு ஒரு தட்சிணாமூர்த்தி இருக்கிறார்.. தனிப்பெரும் சந்நிதி. அழகும் அருளும் நிரம்பிய சந்நிதி. தருமபுர ஆதீனத்து ஆதிபரமாச்சாரிய சுவாமிகள் கமலை ஞானப்பிரகாச தேசிகரை அணுகி உபதேசம் பெற்று, சொக்கலிங்கப் பூசை எழுந்தருளிவித்துக் கொண்ட இடமும் இதுவே.

கமலை ஞானப்பிரகாசருக்கு இங்குள்ள தட்சிணா மூர்த்தி நேரிலும் திருத்தோற்றம் காட்டி அருள் செய்தார் என்பது வரலாறு.

குருபகவானது அருளைப்பெற சித்தீச்சுரம் தட்சிணா மூர்த்திக்கு ஈடாக எவரைச் சொல்வது என்று புரியவில்லை. இந்த ஞான மூர்த்தி தமது மோன நிலையிலேயே நம் குறைகளை எல்லாம் களைத்து விடுவார்.

## குரு ஸ்தலம் : 9
## *ஆளுடையப் பிள்ளை அவதரித்த சீர்காழி*

ஆளுடையப் பிள்ளையின் அவதார ஸ்தலமாகிய பீடுடைய பிரம புத்திரயே – ஆம்; ஏடுடைய மலரான் பணிந்தேத்திய அரும்மணியின் பெருங்கோவிலை வர்ணிக்க வார்த்தையும் உண்டோ?

மற்றொரு சந்தர்ப்பத்தில் இக்கோவிலின் மூர்த்திகளையெல்லாம் ஆற அமர இருந்து தரிசிக்கலாம். இப்போது நாம் இங்கே கட்டு மலை மீது பெரிய நாயகி சமேதராக எழுந்தருளியிருக்கும் தோணியப்பரின் திருச்சந்நிதானத்தில் நிற்கின்றோம்...

பிரமபுரமாகிய சீர்காழியின் குருமூர்த்தம் தோணியப்பரே ஆவார். இங்குள்ள பிரம தீர்த்தக் கரையில் திருஞான சம்பந்தப் பெருமானுக்கு ஞான உபதேசம் செய்தருளிய குரு இவரேயாவர்.

ஒரு காலத்தில் இப்பேரண்டம் முழுமையையும் கடல் கொண்டது.

எம்பெருமான் மீளவும் உயிர்களைப் படைக்க வேண்டி பிரணவத்தையே தோணியாகக் கொண்டு உமா மகேசுவரராக எழுந்தருளித் தோணியை செலுத்திக் கொண்டு வருகையில் ஊழியாலும் அழியாதிருந்த இத்தலத்தைப் பார்த்து இதுவே மூலதார க்ஷேத்திரமாகுமென்று அருளிச் செய்து இங்குத் தோணியுடன் வீற்றிருந்து அருளுவாராயினார்.

இத்தகைய அருள் மணக்கும் பதியில் தோணியப்பரின் கழல் பணிந்தால் போதும். குருவை வணங்கிய பெருமையும் நம்மை வந்து சேருவதோடு நம் குறைகள் எல்லாம் பறந்து போகும்.

## குரு ஸ்தலம் : 10
## *திருச்செந்தூர்*

கடற்கரையில் அமைந்த ஓர் கவின்மிகு கோவில் திருச்செந்தூர் ஆகும். இவ்வூரை மக்கள் பெருஞ்சிறப்போடு வந்து வழிபடுகின்றனர். இத்தலம் அறுபடை வீடுகளில் இரண்டாவது படை வீடாகும்.

எல்லா நாட்களிலும் பக்தர் கூட்டம் நிரம்பி வழியும். விசேட நாட்களில் கூட்டம் அலை மோதும்.

பெரிய கோவில்; பெரிய கோபுரம் எல்லா தெய்வங்களுக்கும் இங்கே சந்நிதி அமைந்துள்ள பாங்கைக் கண்டு இன்புறலாம்.

இத்தலத்தில் முருகப்பெருமானே மூல முதல்வனாக இருக்கிறார். ஆயினும் சிவ பரத்துவமே எல்லாவற்றிலும் பெரிது என்று சொல்லாமல் சொல்லும் பாவனையில் நாளும் முருகப்பெருமான் சிவபெருமானை வழிபட்டுக் கொண்டிருப்பதாக ஐதீகம்.

முருகப்பெருமான் தம் வேல் கொண்டு தோற்றுவித்த அற்புதத் தீர்த்தம் வேல் தீர்த்தமாகும். இத்தீர்த்தமே நாழிக்கிணறு ஆகும். கடலருகே அமைந்த இந்த நாழிக்கிணற்றில் நன்னீர் கிடைப்பது இத்தல அதிசயமாகும்.

குமரகுருபரர் ஐந்தாண்டு அகவை வரை ஊமையாக இருந்தார். அவருடைய பெற்றோர்கள் குழந்தையை இங்குள்ள சண்முக விலாச மண்டபத்தில் கிடத்தினார்கள், முருகப் பெருமானின் அருள் வேண்டி விரதம் இருந்திட, பெருமானுடைய அருளால் குமரகுருபரரின் ஊமைத் தன்மை நீங்கியது. அவர் பேசத் தொடங்கினார். ஞானம் கைவரப் பெற்று 'கந்தர் கலி வெண்பா' பாடினார்.

தேவர்களுக்கு இடுக்கண் செய்வதையே தொழிலாகக் கொண்டிருந்தனர் சூரபத்மாதியர். முருகப் பெருமான் அக்கூட்டத்தினரின் கொட்டத்தை அடக்கி வெற்றி வாகைச் சூடி அருளினார். இதன் காரணமாக ஜெய்ந்தி நகர் என்றும் பெயர் உண்டாயிற்று.

பகழிக் கூத்தர் அருள் பெற்றதும் இங்கே தான். அவருக்குத் தீராத வயிற்றுவலி இருந்தது. செந்தில் முருகனை மனம் உருகி வேண்டிக்கொண்டு அவன் பெயரில் பிள்ளைத்தமிழ் பாடினார். பாட்டுக்குக் கட்டுண்ட பரமன் பகழி கூத்தரின் வயிற்று வலியை நீக்கியருளினான். இதே போல் இங்கே பல நூறு சம்பவங்கள்.

இங்கே பன்னீர் இலையில் வைத்து விபூதி தருவது சிறப்பு.

எல்லா சிவ, முருகன் ஆலயங்களிலும் ஐப்பசியில் வெகு விமரிசையாக நடைபெறும் சூர சம்ஹார விழாவைப் பார்த்திருக்கிறோம். ஆனால் அவ்விழா முதன்மையுடையதாய் நடைபெறும் திருத்தலம் திருச்செந்தூரேயாகும். இந்த குரு நாதனை வழிபட்டவர்களில் கடவுளர், தேவர், முனிவர், அருளாளர் அரசர்களின் பட்டியல் மிக நீளம். இவர்களில் ஒருவராகத்தான் வியாழ பகவானும் வழிபட்டுப்பேறு பெற்றிருக்கிறார்.

இந்த குரு நாதனை வழிபட்டாலே அந்த வியாழ குருவை வழிபட்டதற்குச் சமமாகும். ஆதலின் குருவுக்கும் குருவாக செந்திலதிபன் வீற்றிருக்கும் திருச்செந்தூர் சிறந்த குரு ஸ்தலமாகவும் இருந்து வருகிறது.

## குரு ஸ்தலம் : 11

## *வேத நாயகனார் வாழும் திருவாதவூர்*

குருவருளும் திருவருளும் ததும்பிடும் திருவூர்களில் திருவாதவூரும் ஒன்றாகும். திருவாசகம் அருளிய மணிவாசகர் பிறந்த திருவூர் தான் திருவாதவூர்.

ஊரின் புறத்தே வாதவூர் சிவன் கோவில் தொன்மைச் சிறப்போடும் காணப்படுகிறது.

ஐந்து நிலைக் கோபுரத்தைக் கண்டு உள்ளே செல்கிறோம்.

மணிவாசகப் பெருந்தகையாரின் திருவவதாரச் சிறப்பு வாய்ந்த தலம் என்னும் பெருமையில் மனம் பூரிக்கிறோம்.

கிழக்கு வெளிப் பிரகாரத்தில் நூற்றுக்கால் மண்டபம் ஒன்றுள்ளது. அழகிய சிற்ப வேலைப் பாடுகள் நிறைந்தது. இந்த நூற்றுக்கால் மண்டபத்தை மாணிக்கவாசகப் பெருமானே முன்னின்று கட்டியதாகச் சொல்லப்படுகிறது. இதே போல் தெற்கு உட்பிரகாரத்தில் ஆறுகால் மண்டபம் ஒன்றும் இருக்கிறது. அழகழகான சிற்பங்களும் அழகு வாய்ந்த கொடுங்கைகளும் சிற்பத் திறனுக்குச் சான்றாக விளங்கிக் கொண்டிருக்கின்றன.

இக்கோவிலில் மாணிக்க வாசகர் மூலவராகவும் உற்சவராகவும் எழுந்தருளியுள்ள சிறப்பையும் காணலாம். இங்கே இறைவன் ஆத்மநாதர் என்ற பெயரில் எழுந்தருளியிருக்கிறார். இறைவி ஆரணவல்லி என்ற பெயர் பூண்டு அழகுற காட்சி அளிக்கிறார். இவரது சந்நிதி தெற்கு வெளிப்பிரகாரத்தில் இருக்கிறது. பொதுவாக சிவன் கோவில்களில் அம்பிகை சந்நிதி இறைவன் சந்நிதிக்கு இடது புறம் இருக்கும். ஆனால் ஆலவாய் என்னும் மதுரையில் மீனாட்சியம்மை எழுந்தருளியிருப்பது போல் திருவாவூராகிய இத்தலத்திலும் இறைவன் சந்நிதிக்கு வலது புறமாக அம்பிகை ஆரணவல்லி சந்நிதி அமைந்திருப்பது தனிச் சிறப்பாகும்.

குருவருளும் திருவருளும் ததும்பிடும் தலம் என்று சொன்னோம். இங்கே வந்து வணங்கிட குருவைப் போற்றிய பெருமைக்கு ஆளாக முடியும்.

'வாதவூரினில் வந்தினி தருளிப் பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்' என்று மாணிக்கவாசக சுவாமிகளே திருவாசகம் – கீர்த்தித் திருவகவலில் அருளிச் செய்திருக்கிறார்...

இக்கோவிலின் புனித மரம் மகிழமரம் ஆகும். இம்மர நிழலில் தான் எம்பெருமான் மாணிக்கச் சிலம்பொலி காட்டியருளியிருக்கிறார். இதை "சோதி சேர் வகுள நீழல் சிலம்பொலி துலங்கக் காட்டும் வேத நாயகனார் வாழும் வியன் திருவாதவூர்" என்று பழைய திருவிளையாடற்புராணம் கூறும்.

இவ்விதம் மாணிக்கவாசக சுவாமிகளுக்கே குருவருளும், திருவருளும் கூடிய இத்தலம் குருவுக்குரிய தலங்களில் தனிச் சிறப்போடும் விளங்குகிறது.

## குரு ஸ்தலம் : 12

## *திருக்கழுகுன்றம்*

குளுமையான சூழலில் குருவாகிய இறைவன் வேதங்களை மலையாக்கிக் கொண்டு அம்மலைத் தலத்தில் மாண்புற ஒளிரும். இத்தலம் செங்கல்பட்டிலிருந்து கிழக்கே 16கி.மீ தொலைவில் உள்ளது.

மலைச் சொக்க நாயகியாம் அம்பிகை உடன் இறைவன் வேதகிரி நாதராய் வீற்றிருக்கும் தலம் இது. இத்தலத்துக்குச் சென்று வருவதே

ஓர் இனிய அனுபவமாகும். குரு பகவானாம் எம்பெருமான் வீற்றிருக்கும் வேதகாம பாடசாலை ஒன்றினுக்குச் சென்று வந்தாற் போன்று ஆன்மீக இன்பம் பெருகி நிற்கிறது.

*"கணக்கில்லாத் திருக்கோலம் நீ வந்து*
*காட்டினாய்க் கழுக்குன்றிலே"*

என்று மாணிக்கவாசகர் கழுக்குன்றம் எம்பெருமானது திறம் பற்றி இனிதுற மொழிந்துள்ளார். குருபகவானை மனத்துள் தியானித்துக்கொண்டு இக்கழுக்குன்றத்து எம்பெருமான் கழல் பணிந்தால் நமது துன்பங்கள் யாவும் வெயில் கண்ட பனிபோல் மாயமாய் பறந்து விடும்.

கழுக்குன்றத்து அதிசயங்கள் கணக்கில்லாதவை. பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை இந்திரன் இடியாக இறங்கி வந்து பெருமான் கழல் பணிகிறான்.

மார்க்கண்டேயன் பொருட்டு இங்குள்ள திருக்குளத்தில் சங்கு ஒன்று பிறந்தது. அக்காலம் தொட்டு இன்றும் பன்னிரண்டாண்டுகட்கு ஒரு முறை சங்கு பிறக்கும் குளம் சங்கு தீர்த்தம் என்ற பெயரில் இலங்குகிறது.

யுகம் தோறும் யுகம் தோறும் இரண்டு இரண்டாக கழுகுவந்து வழிபடும் பதி இது. அப்பெருமையினால் இவ்வூர் கழுக்குன்றம் ஆயிற்று.

சோழ நாட்டிலே நெற்குன்றம் என்ற பெயரில் ஒரு திருத்தலம் இருக்கிறது. அத்தலத்தை இந்திரன் கிளி உருவில் இருந்து நெற்கதிர் மணிகளால் அர்ச்சித்தான் என்பர். இந்தத் தொண்டைநாட்டுத் திருக்கழுக்குன்றத்தை அவன் இடி உருவில் வந்து வழிபடுவதும், அதனால் கோவிலுக்கு யாதொரு தீங்கும் ஏற்படாது இருப்பதும் ஆன்மீக அதிசயம் அன்றோ?

## குரு ஸ்தலம் : 13
## *திருவலிதாயம்*

சோழ மண்டலத்தில் சில பாடல் பெற்ற தலங்கள், பாடி என்று முடியும் வண்ணம், திரு ஆப்பாடி, திரு எதிர் கொள்பாடி, திருமழபாடி முதலான க்ஷேத்திரங்கள் இருக்கின்றன. இதேபோல் தொண்டை மண்டலத்திலும் ஒரு பாடி இருக்கிறது. அது திருவலி தாயம் ஆகும்.

சோழ மண்டலத்தில் வலியன் பறவை எனப்படும் கரிக்குருவி வழிபட்ட தலம் ஒன்று திருவலிவலம் என்கிற பெயரில் இருக்கிறது. அதே போல் பரத்துவாச முனிவர் வலியன் எனப்படும் கரிக்குருவி உருவத்தில் இறைவனை வழிபட்டுப் பேறு பெற்றுள்ளதால் திரு வலிதாயம் ஆயிற்று.

திருஞான சம்பந்தர், "வண்டு வைகும் மண மல்கிய சோலை வளரும் வலி தாயம்" என்று கூறும் இத்தலம், சென்னை வில்லிவாக்கம் பக்கத்தில் இருக்கிறது.

மந்தி வந்து கடுவன்னொடுங்கூடி வணங்கும் வலிதாயம் என்று பெண்குரங்குகள் ஆண் குரங்குகளோடு வந்து வலிதாயத்தை வழிபடுகின்றனவாம். மனம் ஒரு குரங்கு. அதை ஒரு வகைப்படுத்தி இறைவன் கழல் பணிதல் வேண்டும் என்பதைத்தான் ஞானசம்பந்தர் அவருக்கேயுரிய நயத்துடன் கூறியிருக்கிறார்.

அருட்பிரகாச வள்ளலார் இத்தலத்துக்கு வந்திருந்த போது பெருமான் மேல் காணப்பட்ட ஆடை வெறும் கந்தலாக இருந்ததைக் கண்டு மனம் வருந்தி பத்துப்பாடல்கள் பாடியுள்ளமை சிறப்பு.

இத்தலத்துக்குரிய பெருஞ்சிறப்பு என்னவெனில் இங்கே வந்து வழிபட்டவர் எண்ணிக்கை தான். பரத்துவாச முனிவர், திருமால், அநுமான், சுக்ரீவன், அகத்தியர், வாயுதேவன், காமதேவன், அக்னி தேவன், சூரிய தேவர், இந்திரன், சந்திரன், காலன் முதலானவர் பட்டியல் நீண்டு கொண்டே போகிறது. இவர்கள் தவிர வியாழபகவான் தவம் கிடந்து அரிய வரம் பெற்று குரு பகவான் ஸ்தானத்தை அடைந்திருக்கிறார்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த இத்தலம் சிறந்த குருஸ்தலங்களுள் ஒன்றாக விளங்கி வருகிறது.

கோவில் சிறு கோவில்தான். மூன்று நிலைக் கோபுரம் ஒன்று கிழக்கு வாயிலை அணி செய்கிறது. தெற்கிலும், மேற்கிலும் சிறு வாயில்கள் உள்ளன. இறைவன் பெயர் வலியதாய நாதர்; இறைவியின் திருப்பெயர் தாயம்மை. கர்ப்பகிருகம் தூங்கானை மாட வடிவம் உடையது.

இறைவன் இறைவி சந்நிதிகளுக்கு முன் முக மண்டபத்தில் மேலே நவ கோணமான ஒரே கல்லில் தேவ மூர்த்தங்கள் அடங்கிய சிற்பம் காணத்தக்கது.

## குரு ஸ்தலம் : 14

## *தக்கோலம்*

தக்கோலம் அரக் கோணத்திலிருந்து 13கி.மீ தொலைவில் உள்ள திருத்தலம். சுரர் குருவும் முக்காலத்து முனிவர்களும் போற்றிய இத்திருத்தலத்தை இக்காலத்தவரும் விசேடமாய் வந்து வழிபடுகின்றனர். இங்குள்ள இறைவர் ஜலநாதேசுவரர், இறைவி கிரிராஜ கன்னிகாம்பாள்.

கோவில் நிறைந்த கூட்டம் என்ன விசேடம் என்று கேட்டோம். இன்று வியாழக்கிழமை குரு பகவானுக்கு உகந்த நாள். ஆதலின் இத்தனைக் கூட்டம் என்றனர்.

குரு பகவானுக்கு விசேடமான தலமோ? என்றோம். விஷேடத்திலும் விஷேடமான தலம். இங்கே அவர் வீற்றிருப்பதே ஓர் தனி விஷேடம் உக்குடி ஆசனம் என்பார்கள். போய் பாருங்கள். குருவின் அருளை நாடுங்கள், உங்கள் குறை தீருகிறதா இல்லையா என்பதை சொல்லுங்கள் என்றார்கள்.

தக்கோலம் என்றால் அழகழகான மூர்த்தங்களின் உறைவிடம் என்று மட்டுமே நினைத்திருந்தோம். குரு பகவானுக்கு இங்கே இத்தனை மகத்துவம் இருப்பதை இப்போதுதான் நேரில் பார்க்கிறோம். என்று நமது வியப்பைத் தெரிவித்தோம்.

திருமகாறல், திரு ஊறல் என்னும் பதிகள் எல்லாம் தொண்டை நாட்டில் தான் இருக்கின்றன. திருமகாறலில் நந்தியம்பெருமான் நின்ற கோலத்தில் காட்சி அளிப்பது சிறப்பு. திரு ஊறலில் நந்தியார் வாயினின்று நீர் சுரந்து வருவது அற்புதம். "என்னய்யா தக்கோலம் பற்றி பேச வந்தீர்? இப்போது திருஊறலைப் பற்றி எக்காளமிட்டுப் பேசுகிறீரே என்று தானே கேட்கிறீர்கள்? திரு ஊறல்தான் தக்கோலம், தக்கோலம் தான் திருஊறல் போதுமா?

இனி குருவாயிற்று நீங்களாயிற்று.

## குரு ஸ்தலம் : 15

## *குருவருள் பொங்கும் திருப்பெருந்துறை*

குரு ஸ்தலங்களை நினைக்கும் போது திருப்பெருந்துறையும் நம் நினைவுக்கு வருகிறது. இறைவன் குருந்த மரத்தடியில் குருவாக

வீற்றிருந்து மணிவாசகப் பெருமானை ஆட் கொண்டருளிய ஆவுடையார் கோவில் என வழங்கப் பெறும் ஊரே திருப்பெருந்துறை ஆகும்.

மாணிக்க வாசகருக்கு இறைவன் செந்தழல்புரை தன் திருமேனி காட்டி ஆட்கொண்டருளியபின் திருப்பெருந்துறை உறை கோவிலை விரித்துக் கட்டினார் எனக் கூறப்படுகிறது.

திருப்பெருந்துறை ஸ்ரீ ஆத்மநாத சுவாமி கோவிலை மாணிக்கவாசகர் கலைக் கருவூலமாகவே படைத்திருக்கிறார். இறைவன் குருபரனாக அவனியில் வந்து அவரை ஆட்கொண்டதிறம் வாய்ந்த கோவில் இது. சுவாமி அருவமாகவும், அம்பிகை அருவுருவமாகவும், மாணிக்கவாசகர் உருவமாகவும் விளங்கும் இத்திருக்கோவிலை மன்னர்கள் பலர் கலையழகுடைய திருக்கோவிலாகக் கவின் பெறச் செய்துள்ளனர். இங்கு நடைபெறும் திருவிழாவில் மாணிக்கவாசகப் பெருமானுக்கே அனைத்துச் சிறப்புக்களையும் தந்து இறைவன் ஆனந்திக்கும் சிறப்பைக் காணலாம்.

இங்கே இறைவன் ஸ்ரீ ஆத்மநாத சுவாமி, அம்பாள்பெயர் ஸ்ரீ யோகாம்பிகை. மாணிக்கவாசகர் மிகச் சிறப்போடு போற்றப்படுகிறார்.

அருவமும் உருவமாகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப் பிரமமாய் நின்ற சோதிப் பிழம்புதான் இறைவன்.

அந்த இறைவனும் போற்றிய சீடர் மாணிக்கவாசகர். மாணிக்க வாசகருக்கு எற்ற ஆசாரியனாக ஒளிர்ந்தவர் இறைவன்.

குருவருள் பெறுவதற்கு இதனிலும் ஓர் சிறந்த தலம் உண்டோ? அல்லாமலும் சமயாசாரியர் நால்வரில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தர மூர்த்தி சுவாமிகளாகிய மூவரும் கோவில் கட்டியதாகத் தெரியவில்லை. மாணிக்கவாசகப் பெருமான் ஒருவர் தாம் கலைநயம் மிளிர இக்கோவிலை நிர்மாணித்துள்ளார்.

## குரு ஸ்தலம் : 16

## *குருவருள் ததும்பும் பட்டமங்கலம்*

முருகப் பெருமானுக்கு இளமையில் பால் கொடுத்த கார்த்திகைப் பெண்கள் அறுவரும், இறைவனிடம் சென்று தமக்கு எண்வகைச் சித்திகளையும் அருள வேண்டுமென வேண்டினர். அதற்கு எம் பெருமானும் அவர்களுக்கு அட்டமாசித்திகளை அருளினார். ஆனால் கார்த்திகைப் பெண்களாகிய அவ்வறுவரும் பெருமான் உபதேசித்த அட்டமாசித்தி மந்திரங்களை ஊழ்வசத்தால் மறந்தே போயினர். இதனை

அறிந்த இறைவன், பட்டமங்கை என்னும் திருத்தலத்தில் ஆலமரத்தின் கீழ், கற்பாறைகளாகிக் கிடப்பீர்களாக எனச் சபித்தார். அறுவரும் பட்ட மங்கையில் கற்பாறைகளாயினர். இவ்விதம் ஆயிரம் ஆண்டுகள் கல்லாகிக் கிடந்தனர். பெருமான் அவர்களுக்கு அருள்புரிய திருவுளம் பற்றினார். அவர் ஆசாரிய உருவில் தோன்றி பாறைகளின் மீது அருள் நோக்கம் செய்தார்.

கார்த்திகைப் பெண்களாகிய அவ்வறுவரும் பழைய வடிவம் பெற்று எழுந்தனர். பெருமானை வணங்கி நின்றனர். எம்பெருமானும் அவர்கள் பால் கருணை கூர்ந்து எட்டு சித்திகளையும் உபதேசித்து அருளினார்.

*"பட்ட மங்கையில் பாங்காய் இருந்து அங்கு*
*அட்டமா சித்தி அருளியதும்"*

என இவ்வரலாற்றை மாணிக்கவாசகர் திருவாசகம், கீர்த்தித்திருவகவலில் கூறியிருப்பதைக் காணலாம்.

பட்டமங்கையாகிய இத்தலம் இந்நாளில் 'பட்டமங்கலம்' என்ற பெயரில் வழங்குகிறது. காரைக்குடி, திருப்பத்தூர், சிவகங்கை முதலான ஊர்களில் இருந்து பட்டமங்கலத்துக்கு பஸ்வசதி இருக்கிறது.

இத்தலத்தில் மிகப்பெரிய ஆலமரம் ஒன்று வியப்புறு பெருமையுடனும் பழமையுடனும் காணப் பெறுகிறது. கார்த்திகைப் பெண்கள் இந்த மரத்தடியில் தான் கற் பாறைகளாகி தவம் கிடந்தனர் எனப்படுகிறது. இங்குள்ள தட்சிணாமூர்த்தி கிழக்கு முகமாக எழுந்தருளியிருப்பது சிறப்பு. பெருமான் இவ்வகையில் அமர்ந்தே அறுவருக்கும் அட்டமா சித்தியைப் போதித்தருளியுள்ளார்.

குருவருள் பெறுவதற்காக இங்கே வந்து வழிபட்டுச் செல்வதை மக்கள் மா பாக்கியமாகக் கருதுகின்றனர்.

குறை தீரவும், வரம் பெறவும் பட்டமங்கலம் பாங்கனை தொழுதல் நலமாகும்.

## குரு ஸ்தலம் : 17
## *கோனேரி ராஜபுரம்*

நம்முடைய குரு பக்தியைக் காட்டிட இதோ மயிலாடுதுறை வட்டத்தில் உள்ள கோனேரிராஜபுரம் விரைகிறோம். பெரும்பான்மை இத்தலத்தை திருநல்லம் என்று கூறுவதே வழக்கமாக உள்ளது.

செம்பியன்மாதேவியரால் நிர்மாணிக்கப்பெற்ற ஆலயம் இது. இங்கு உள்ள ஆடவல்லான் திருத்தோற்றம் விசுவரூபத் தோற்றம் போலும் மிகப் பெரியதாய் இருக்கிறது. அவரது திருவுருவ பொலிவும் நம்மை பரவசப்படுத்துகின்றது.

பூமிதேவி, மகாவிஷ்ணுவின் உபதேசப் படி இத்தல இறைவராகிய ஸ்ரீ உமா மகேசுவரரை பூஜித்து இருக்கிறார். பூமாதேவியின் பொருட்டு வியாழ குருவாகிய பிரகஸ்பதி ஈசனைப் பிரதிஷ்டை செய்திருக்கிறார்.

இங்கு தட்சிணாமூர்த்தி சந்நிதிக்கு அருகே உளள ஞானகூபம் என்னும் கிணறு விஷேடமானதாகும்.

இத்தலத்தில் பூமி தேவியால் ஸ்தோத்தரிக்கப்பட்ட ஓர் விஷேடமான பாடல் உண்டு. இந்த ஸ்தோத்திரத்தை வெளியூர் புறப்படும்போது, காய்ச்சல் முதலிய நோய் வந்த காலங்களிலும் – வயிறு சம்பந்தப்பட்ட நோய்களானாலும், உற்றார் உறவினர்களால் கைவிடப்பட்டவர்களும், கிரகங்கள் சாதகமாக இல்லாத காலத்திலும் இந்த ஸ்தோத்திரத்தை இடைவிடாது ஜெபிக்க வேண்டும். இந்த ஸ்தோத்திரத்தை ஜெபித்தால் எல்லா துன்பங்களும் விலகி, அவர்கள் மேன்மை அடைவார்கள்.

## *த்யான ஸ்லோகம்*

*மரகத மணி தேஜா மானவீ லோக பூஜ்யா*
*ஸகல புவன ரக்ஷாகாரிணீ சாந்த மூர்த்தி : |*
*ஸ்தவமிதம அயி சம்போரக்ரத : கீர்த்ய பஸ்சாத்*
*முனிவர ஜனஸங்கை : துஷ்டிம் இஷ்டாம வாப ||*

இதன் பொருள் : மரகதப் பச்சைப்போல் உள்ளவளும், மனிதர்களால் பூஜிக்கத் தக்கவளும், எல்லா உலகையும் காப்பவளும், அமைதியே உருவானவளுமான பூமி தேவியானவள் இந்த ஸ்துதியை முனிஜனங்களுடன் ஈசனின் எதிரில் பாடி இஷ்டமான வரத்தை அடைந்தார்.

இனி அந்த ஸ்தோத்திரம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது. படித்து மகிழுங்கள்.

*1. நமோ நமஸ்தே ஜகதீஸ்வராய சிவாய லோகஸ்ய ஹிதாய சம்பவே |*
*அபார ஸம்ஸார ஸமுத்தராய நமோநமஸ்தே ப்ருதி விஸ்ராய ||*

2. *விஸ்வாதிகாய அதிவிமானகாய ஸோமாய ஸோமாந்த விபூஷணாயே ஸ்ரீகாளகண்டாய க்ருபாகராய நமோ நமஸ்தே ப்ருதிவீஸ்வராய*

3. *ஆஸாம்பராய அம்பர வர்ஜிதாய திகம்பராய அம்பிகாய யுதாய குணத்ரயாத்மை : அபவர்ஜிதாய நமோ நமஸ்தே ப்ருதிவீஸ்வராய*

4. *மாயா விகாராதி விவர்ஜிதாய மாயாதிருடாய தபஸ்திதாய கலா திருடாய கபர்தினே ச நமோ நமேஸ்தே ப்ருதிவீஸ்வராய*

5. *கபாலினே காம விவர்ஜிதாய கதம்ப மாலா கலிதாய பூம்னே நிரஞ்சனாயாமித தேஜேஸேச நமோ நமஸ்தே ப்ருதிவீஸ்வராய*

## குரு ஸ்தலம் : 18

## *திருவொற்றியூர்*

திருஒற்றியூர் என்று சொன்னதுமே சிவபிரான் ஆதிபுரீஸ்வராக.. மாணிக்கத் தியாகராஜராக.. புற்றிடங்கொண்ட இலிங்கேசுவரராக.. மகிழடி சேவையினராக.. படம்பக்க நாதராக.. இப்படி அருள் மணக்கப் பல பல வடிவங்கள் தாங்கி இன்னருள் பாலித்து வரும் தலமாயிற்றே! என்றே சொல்லத் தோன்றும்.

இத்தலத்து அம்பாளாகிய வடிவுடை அம்மையை நினைத்தவுடன் அவரது பேரருட் திறமும் நினைவுக்கு வருகிறது. இவரே திருச்சுற்றில் வட்டப்பாறையம்மை – துர்க்கையாகவும் தன் அருட்சக்தியை வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறார்.

இவ்வூரின் 'மகிழசேவை' மிகவும் புகழ் வாய்ந்தது. மாசி மாதத்தில் தனிப்பெருஞ்சிறப்போடு நடைபெறுவதாகும்.

சுந்தரருக்கு திருவாரூரும், திருவொற்றியூரும் இரு கண்களைப் போல. பட்டினத்தடிகள், வடலூர் இராமலிங்க அடிகளார் என்று இத்தலத்தோடு தொடர்புடைய அருளாளர்களின் பட்டியல் நீளும்.

நாகப்பட்டினம் நீலாயதாட்சி அம்மன் கோவிலில் பஞ்சமுக கணபதி சிம்ம வாகனத்தில் காட்சி அளிப்பதைப் பார்த்திருக்கலாம். அதனையடுத்து திருவொற்றியூரில் தான் சிம்மவாகன பஞ்சமுக விநாயகரைப் பார்க்க முடிகிறது...

இவை எல்லாவற்றையும் விட, நாம் குரு பகவானை தரிசனம் செய்வதற்காகவே சென்னைக்கு வடக்கே எட்டு கி.மீ தொலைவிலுள்ள இந்த திருவொற்றியூருக்கு வந்துள்ளோம்...

இத்தலத்தில் அருள் சார்ந்த மூர்த்தங்கள் பல இருந்தாலும் நம் கவனத்தை வெகுவாக ஈர்ப்பவர் தெட்சிணாமூர்த்தியே ஆவார்.

தமிழ் நாட்டில் இங்குள்ள தெட்சிணாமூர்த்தியின் அளவுக்கு மிகப்பெரிய வடிவம் வேறெங்கும் இருப்பதாகத் தெரியவில்லை. கோனேரிராஜபுரத்தில் நடராஜரைக் கண்ட மலைப்பு இங்கு தெட்சிணாமூர்த்தியைக் காணும் போது ஏற்படுகிறது. அதுமட்டுமல்ல; இப்பெருமான் வடக்கு நோக்கி வேறு காட்சி அளிக்கிறார். எங்கும் தென்திசை நோக்கி எழுந்தருளியிருக்கும் இப்பெருமானை பட்டமங்கலத்தில் கிழக்கு நோக்கி எழுந்தருளியிருந்ததைப் பார்த்திருக்கிறோம். ஆனால் இது போல் வடக்கு நோக்கிய தெட்சிணாமூர்த்தியை வேறு எங்கும் பார்த்தது இல்லை; இருப்பதாகவும் தெரியவில்லை. வடிவில் இவருக்கு அடுத்தபடியாக உள்ள தெட்சிணா மூர்த்தியை திருநல்லூர் பெருமணத்தில் காணலாம்.

## குரு ஸ்தலம் : 19
## *ஸ்ரீ முஷ்ணம்*

'எவ்வுயிரும் தன் வயப்பட்டதே' என்று காட்டிடத் தான்.. அல்லது 'தாமே எவ்வுயிரும் கொண்டுள்ளோம்' என்பதை குறிப்பாக உணர்த்த வேண்டித்தான் பரந்தாமனார் பரி முகத்தவராகவும், ஸ்ரீவராக முகத்தவராகவும் – இன்னும் பிற மூர்த்தங்களாகவும் இருந்து அருள் இன்பம் ஊட்டி வருகிறாரோ?

தில்லையிலிருந்து இழைந்துச் செல்லும் ஸ்ரீ முஷ்ணம் பஸ் ஏறி வராகச் சேத்திரத்தில் இறங்கி ஸ்ரீ பூவராக சன்னிதியை அடைந்ததும் நமது சிந்தனை இப்படித்தான் ஓடியது..

வராகப் புராணம் என்று மாபுராணம் ஒன்று இருக்கிறது.

ஒரு சமயம் பூமியானது கடலில் மூழ்கிக் கிடக்க, அதை மேலே கொண்டு வர வேண்டி பிரம்மதேவர் நாராயணனை தியானம் செய்தார். அப்போது பிரம்மாவின் மூக்கின் வழியே கட்டை விரல் அளவுள்ள ஒரு பன்றிக் குட்டி வெளியே வந்து பின்னர் அதுவே பெரிய உருவத்துடன் கடலுக்குள் மூழ்கி பூமியை மேலே கொணரும் போது இரண்யாட்சனை வென்று வெளியே வந்த போது அத்திருவை சேவித்த தேவர்களின் வேண்டுகோளின்படி நாராயணர் ஸ்ரீமுஷ்ணத்தில் அத்திருக்கோலத்துடன் எழுந்தருளியிருந்து அருள்புரிந்து வருகிறார்.

ஸ்ரீமந்நாராயணன் இங்குள்ள அரசமரத்தடியில் வீற்றிருந்து தேவர்களுக்கு வேதத் தியானம் செய்து வைத்தார் என்னும் வரலாறு பிரசித்தம்.

இங்குள்ள நித்தியபுஷ்கரணியின் கீழ்புறக் கரையில் ஸ்ரீலெட்சுமி நாராயணர் சந்நிதி உள்ளது. இரண்யாட்சனை வதம் செய்த ஸ்ரீபூவராகப் பெருமான் உக்கிரமாக விளங்கியதைக் கண்டு தேவர்கள் பெருமாள் சாந்தமடைய வேண்டி, பூதேவி ஸ்ரீவராகப் பெருமானைப் பிராத்திக்க, வராகப் பெருமாளும் பூதேவியுடன் லட்சுமிவராகராக காட்சி அளித்தார். லெட்சுமி நாராயணர் சந்நிதியில் வேதபாராயணம் செய்வது ஓர் மரபாக இருக்கிறது. ஆதலால் தான் அருள்மணக்கும் குரு ஸ்தலங்களுள் ஸ்ரீமுஷ்ணத்தையும் நாம் தொழ வேண்டியிருக்கிறது.

## திருவகீந்திரபுரம்

நமது திருத்தலங்கள் யாவும் ஞானச் செழுமையினோடும் இலங்குவது வெளிப்படை..

இவற்றுள் பகவான் வெள்ளைப் பரிமுகராய்... பாரோர் போற்றும் பெருந்தெய்வமாய் அருள் மணக்க வீற்றிருக்கும் திவ்விய தேஜோமயமான திருத்தலம்.. அயிந்தை ஆகும். திருவயிந்திரபுரம் என்பதும் திருவகீந்திரபுரம் என்பதும் இந்த அயிந்தையே ஆகும்.

வேறொன்றுமில்லை. திருவனந்தாழ்வான் என்னும் ஆதிசேடனுக்குரிய பெயர்களில் ஒன்றுதான் அகிந்திரன் என்பது. அந்த அகிந்திரனாகிய ஆதிசேடன் இங்கே மூல பேரம் கொண்டு வீற்றிருக்கும் தலமாதலின் அகீந்திரபுரமாயிற்று.

வேதாந்த தேசிகருக்கு ஹயக்கிரீவராகிய இங்குள்ள வெள்ளைப் பரிமுகர் மீது கொள்ளைப் பிரீதி.

அறிவுப்பசி வேண்டுவோர்க்கு இத்தலம் ஓர் தேன் பலாச் சுளையாகும்.

ஞானத்தையே சொரூபமாகக் கொண்ட ஹயக்கிரீவரின் அருளால் வேதாந்த தேசிகர் வேதம் விழுமிய வித்தகராகியிருக்கிறார். அவரது தபோபலத்தால்.. மந்திரபலத்தால் கருடாழ்வரும், ஹயக்கிரீவரும் பிரதட்சியமாகி அருள் சுரந்துள்ளனர்.

கடலூர் அருகே உள்ள ஹயக்கிரீவர் சந்நிதியுள்ள ஔஷதமலையைத் தரிசித்தாலே நம் பாவம் பறிபோகும். இங்கே கருடாழ்வாரை கவனிக்காமல் விட்டு விடாதீர்கள். அவர் கூப்பிய கைகளுக்கு மாறாக... கை காட்டி சேவை சாதிக்கும் அழகினோடும் காட்சித் தருகிறார்.

குருவை வழிபட்டால் நமது குறையும் தீரவேண்டும். ஞானமும் பெருக வேண்டும். இந்த இரண்டும் ஏக காலத்தில் நிறைவேற வேண்டுமானால் திரு அயிந்தையை நம் மனத்துள் அழுந்தப் பற்றிக் கொள்ள வேண்டும். கல்விக்கும், வித்தைக்கும் இவரே மகாதெய்வம். இந்த மாதெய்வம் இருக்க, மனக்குறை ஏன்?

## குரு ஸ்தலம் : 20
## குருவித்துறை

வியாழ குருவின் மகன் கசன். மிருத சஞ்சீவினிமந்திரத்தை அறிந்து வர சுக்கிராச்சாரியாரிடம் வருகிறான். சுக்கிராச்சாரியாருக்கு தேவயானி என்றொரு மகள் இருந்தாள். அவள் கசன் மீது மையல் கொள்கிறாள். எப்படியும் அவனை அடைய வேண்டும் என்ற விரகதாபத்தால் தவிக்கிறாள். ஆனால் கசனோ பிரம்மச்சரிய விரதம் தவறாதவனாய் இருந்தான்.

இந்த நிலையில் கசனை யார் என்று தெரிந்த அசுரர்கள் அவனை எரித்து சாம்பலாக்கி அச்சாம்பலை மதுவில் கலந்து சுக்கிராச்சாரியாரிடம் கொடுத்து விடுகின்றனர். கசன் பொருட்டு தேவயாணி தன் தந்தை சுக்கிராச்சாரியாரிடம் அழுது மன்றாடிட, சுக்கிராச்சாரியார் தன் வயிற்றில் உள்ள கசனிடம் "உனக்கு மிருத சஞ்சீவினி மந்திரத்தைச் சொல்லிக் கொடுக்கிறேன். நீ என் வயிற்றிலிருந்து வெளிப்பட்டவுடன் என்னை உயிர்ப்பிக்க வேண்டும்" என்கிற நிபந்தனையுடன் கசனை வயிற்றினிருந்தும் வெளிப்படச் செய்கிறார்.

இது இவ்வாறிருக்க, மிருத சஞ்சீவினி மந்திரத்தை சுக்கிராச்சாரியிடமிருந்து எப்படியாவது அறிந்து வரும்படி தன் தவப் புதல்வனை அனுப்பி வைத்த வியாழ குரு, காக்கும் கருணாமூர்த்தியின் அருளின்றி எதுவும் நடைபெற இயலாது' என்பதை உணர்ந்து சோழவந்தானுக்கருகே வைகைநதியின் தென்கரையில், 'கசன்

